# சங்ககாலப் புலவர்கள்

(Poets of the Sangam Age)

ச. அ. இராமசாமிப் புலவர்,
[illegible]
[illegible]





ஒற்றுமை ஆபீஸ்,
தியாகராயநகர், மதராஸ்.
1947

[விலை அணா 8

# பொருளடக்கம்



Grateful acknowledgement is made to A. I. R. Trichinopoly for permission to publish the broadcast talks on Sangakala Pulavargal (Poets of the Sangam Age).
Proprietor, Ottrumai Office, T. Nagar, Madras.

# சங்ககாலப் புலவர்கள்

## 1. ஓரம்போகியார்

கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப் புலவர்கள் பலருள் ஓரம் போகியார், ஒருவராவார். இவ்வாசிரியருடைய பெயர் பாடபேதமாக ஓரம் போதியார். ஓரேர் போகியார் ஒன்னூர் உழவர் எனப் பலவாறாகக் காணப்படுகிறது. எட்டுத் தொகை நூல்களில் இவ்வாசிரியர் இயற்றியுள்ள பாடல்கள் 110 ஆகும். (ஐங்குறுநூற்றில் மருதத் திணையைப் பற்றிய பாடல்கள் 100-ம் நற்றிணையில் 2-ம், குறுந்தொகையில் 5-ம் அகநானூற்றில் 2-ம் புறநானூற்றில் ஒன்றும் ஆகமொத்தம் 110 பாடல்களாகும்.)

இவர் தமிழ் நாட்டரசர் முடியுடை மூவேந்தர்களாலும் பிறவள்ளல்கள் சிலராலும் நன்கு மதிக்கப்பட்டவர். இவரால் பாடப்பட்ட முடியுடை மன்னராவார். 1. சேரரில் சேரமான் ஆதன் அவினியும் 2. சோழருள் வெல்போர்ச் சோழன் கடுமான் கிள்ளியும் 3. பாண்டியருள் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஆவார்கள். இவரால் பாடப்பட்ட கொடையாளிகள் மத்தி, விரான் என்ற இருவருமாவார். இவர் பாடலில் வந்துள்ள ஊர்கள் தேனூர், ஆமூர், இருப்பை, கழார் என்ற நான்குமாம். ஆறுகள், காவிரி, வையை ஆகிய இரண்டுமாம். நீர்த்துறையுள்ள வையைக் கரையிலுள்ள

திருமருதப் பெருந்துறையும் விழாக்களுள் இந்திர விழாவும், தைமாத நீராட்டு விழாவும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

இவரது பாடல்கள் சொற்சுவை பொருட் சுவைகளில் சிறந்து பொருள்களின் இயற்கை அழகையும் தமிழ் மொழியின் இனிமையையும் நன்கு தெரிவிக்கின்றன. இத்தமிழ் நாட்டில் வசித்த பண்டைய தமிழ் மக்களது பழக்க வழக்கங்களையும் பல வரலாறுகளையும் புலப்படுத்துகின்றன. இவ்வாசிரியர் பாடிய 110 பாடல்களுள் புறநானூற்றில் ஒரு பாடல் நீங்கலாக ஏனைய 109 பாடல்களும் அகத்திணையின் பகுதிகளுக்கே இலக்கியமாக அமைந்துள்ளன. அவற்றுள் குறிஞ்சியையும் நெய்தலையும் பற்றிய இரண்டு பாடல்கள் நீங்க ஏனைய 107 பாடல்கள் மருதத்திணையின் இயல்பை விரித்து அந்நிலத்தில் தோன்றிய வளம் பொருந்திய கருப்பொருள்களைப் பொருளாகக் கொண்டு உள்ளுறையுவமம் இறைச்சி முதலாயகுறிப்புப் பொருள்களை அமைத்துப் பல்வகைச் சத்துவமும் புலப்படக் காட்டியுள்ளார். இவ்வாசிரியர் அகத்திணையியலில் மிகுதியாகப் பாடிய மருதத்திணையின் ஒழுகலாறுகளைப் பற்றி முதலாவதாக ஆராய்வோம். தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலங்களை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாகப் பிரித்து வாழ்ந்தனர். அவற்றுள் மருதம் என்பதற்குப் பொருள் வயல் ஆதலின் அந் நிலத்தின் இயல்பு பற்றியும் அந்நிலத்தில் மருதமரம் சிறந்து இருத்தல் பற்றியும் அந்நிலத்திற்குச் சிறந்த. ஒழுக்கமான ஊடலும் கூடலுமாகிய காமம் நுகர்தல் பற்றியும்

ஆகிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று காரணம் பற்றியும் அந்நிலத்திற்குப் பெயர் வந்தது என்று கூறலாம்.

மருத நிலத்திற்குரிய சிறந்த ஒழுக்கமாவது ஊடலும் கூடலுமாம். ஊடல் என்பது தலைவன் தலைவியர்களிடையே உண்டாகும் சிறிய பிணக்காகும். அதாவது தலைவனும் தலைவியும் மணஞ்செய்து கொண்ட பின்னர் அன்புடன் இல்லறம் நடாத்தும் கற்புக் காலத்தே தலைவியை விட்டுப் பரத்தையர் இல்லத்திற்குப் பிரிகிறான். பிரிந்த தலைமகன் நீண்ட நாட்கள் சென்ற பின் மறுபடியும் தலைவியிடம் வருகிறான். இச்செய்தியை அறிந்த தலைமகள் தலைவனது தீய ஒழுக்கத்தை வெறுத்துப் பிணங்குவாள். தலைவியின் பிணக்கைத் தீர்ப்பதற்குத் தலைவன் பாணன், விறலியர், தோழியர் முதலாயினோரைச் சமாதானஞ் செய்யுமாறு அனுப்புவான், அல்லது தானே நேரில் சென்று சில சமாதான மொழிகளைக் கூறித் தலைவி பிணக்கை நீக்கி அவளுடன் கூடுவான். அவ்வமயம் இருவருக்கும் தோன்றும் ஊடல் மிகச் சிறந்ததாகும். இதனை,

> 'ஊடலில் தோற்றவர் வென்றார் அது மன்னும்
> கூடலிற் காணப்படும்' (குறள் 1327)

என்று தலைவன கூறுவதால அறியலாம். இங்ஙனம் இன்பம் சிறத்தல்பற்றி இந்த ஊடலை ஊடல் நீக்கக் கூடிய தலைவனும் மீண்டும் விரும்புவான். இதனை தலைவி 'இன்னும் ஊடுவாளாக. யான் அவளிடம் ஊடல் நீக்க வேண்டுவேனாக. இதற்கேற்ப இராக்

காலம் நீடிப்பதாக' என்று தலைவன் கூறுகிறான்.' ஊடல் போல் இன்பந்தருவது தேவருலகத்தும் இல்லை. அதாவது,

'புலத்தலிற் புத்தேள் நாடுண்டோ'

(குறள் 1323)

என்று தலைவி ஊடலைப் பாராட்டிக் கூறுவதாகவும் வரும் திருக்குறள் பாடல்களால் நன்கு உணரலாம். தலைவனிடம் பரத்தையர் பிரிவு முதலிய குற்றங்கள் இல்லாதிருந்தாலும் தலைவி பிணங்குவாள். இதனை,

'இல்லை தவறவர்க்காயினும் ஊடுதல்
வல்ல தவரளிக்கு மாறு'

என்ற குறட்பாவால் உணரலாம். இவ்வூடல் நிகழ்ச்சியை ஆராய்ந்து நோக்கின் தலைவன் தலைவி யர்கள் தலைமைக் காலத்துக் கூடிப்பெற்ற இன்ப வுணர்வை மீண்டும் இந்த ஊடல் நிமித்தமாகப் பெறுகின்றனர் என்பதைத் தெளிவாக உணரலாம். தலைவன் தலைவியர்களது இன்ப வாழ்விற்கு இனிய மொழியும் உள்ள நெகிழ்ச்சியாகிய அன்புந் தேவை. இதனைத் தலைவி ஊடலாற் பெறுகின்றாள். இது பற்றியே தெய்வப் புலவர் திருக்குறளில்,

'ஊடுதல் காமத்திற்கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்'

என்று இறுதியிற் கூறியுள்ளார். மருதத்திணை பற்றிய இந்த ஒழுக்கமனைத்தையும் ஆசிரியர் ஓரம் போகியார் ஐங்குறுநூற்றில் முதல் நூறு பாடல்களி லும் பிற தொகை நூல்களில் 7 பாடல்களிலும்

அவ்வந் நிலத்துக் கருப்பொருள்களை ஆதாரமாக வைத்து மிக விரிவாக விளக்கியுள்ளார். கருப் பொருள் பற்றி வருகின்ற சில ஒழுக்கங்களைச் சிறிது ஆராய்வோம்.

ஓரம்போகியார் காண்கின்ற மருத நிலம் மருதம், காஞ்சி, தேமா, கொன்றை, கரும்பு, வேழம் பிரம்பு, தாமரை, நெய்தல் குருகு, செம்மங்கோழி, வண்டு, மீன், முதலை நீர் நாய், எருமை, ஆமை‘ நண்டு அந்நிலத்துத்தோன்றும் கருப்பொருள்களாலும் பொய்கைஆறு, வயல், ஆகிய நீர்நிலைகளாலும்முதலிய சிறப்புற்று விளங்குகின்றது.

ஆசிரியர் மருதத்திணையில் பேசும் மக்கள் கருத்தை இக்கருப்பொருள் வருணனையில் உள்ளு றைப் பொருளாக வைத்துக் குறிப்பிற் புலப்படுத்து மாறு வலியுறுத்தலைப் பலவிடத்தும் காணலாம். இவ்வழக்குத் தமிழ் மொழிக்கே சிறந்தது எனலாம். செம்பொருளினும் குறிப்பொருளே அறிவுடை யார்க்கு இன்பஞ் செய்வனவாம். சங்க இலக்கியங் களில் இவருடைய பெரும்பாலான பாடல்கள் குறிப்புப் பொருளையுடையனவாகவே காணப்படு கின்றன. அவற்றுள் சில காண்போம்.

(ஓர் தலைமகன் அன்போடு மணந்து கொண்ட தன் மனைவியிடம் இன்பந் துய்க்கின்றான். தன் தலை விக்குப் பிள்ளைப் பேறு உண்டானவுடன் அவள் உடல் தளர்ச்சி யடைகின்றது. அதனால் தலைமகன் கட்டமைந்த காதல் பரத்தையிடம் செல்கின்றான். தலைவனது தீய ஒழுக்கம் தலைவிக்குத் தெரிகிறது.

அதனால் தலைவனுக்கு என்ன தீங்கு வருமோ என்று அஞ்சித் தலைவி கவலைப்படுகிறாள். அதனால் அவள் உடல் மெலிந்து தேய்கிறது. தலைவனின் தீய ஒழுக்கம் இறுதியாகத் தலைவியின் உயிரையே கவர்கின்றது. இக்கருத்தைத் தலைவனது நீர்த்துறையினுள் வாழ்கின்ற கருப்பொருள்களால் ஆசிரியர் உள்ளுறை நயந்தோன்ற அமைத்துக் கூறுகிறார். அதாவது தலைவன் வாழ்கின்ற நீர்த்துறையில் ஆண் முதலையும் மீனும் நீண்ட காலம் ஒருங்கு வாழ்கின்றன. முதலை தன்னோடு நீண்ட நாள் உயிர் வாழ்ந்த மீனை அதன் பழமை நோக்காது கொன்று தின்றுவிடுகிறது. அது போல் தலைவனாகிய நீயும் உன்னுடன் நீண்ட நாள் அன்புடன் வாழ்ந்த தலைவியை விடுத்துப் பரத்தையரிடம் சென்றாய். ஆதலின் உன் தீய ஒழுக்கம் தலைவியின் உயிரைக் கவர்ந்தது என்று தோழி தலைவனைப் பார்த்து உள்ளுறைப் பொருளாக,

**'முதலைப் போத்து முழுமீன் ஆரும், தண்டுறை யூரன்'**

என்று கூறுகிறாள்.

பரத்தையின் வன்மையான கட்டுப் பாட்டினால் தலைவியை மறந்ததுமல்லாமல் அவள் துன்புறும்படியான பல காரியங்களும் செய்து வந்தான். இக்கருத்தை ஆசிரியர் ஓர் கருப்பொருட் காட்சியுள் உள்ளுறைப் பொருளாக அமைத்துக் காட்டுகிறார். ஆற்றின் கரையோரத்தில் உள்ள பல மாமரங்கள் இளந்தளிர் காட்டிப்பூத்துக்காய்த்துச் செழிப்புற்று நிற்கின்றன. அவ்வரிசையின் மத்தியில் ஓர் மாமரத்தின் கீழேயுள்ள (வேழக்கரும்பு), பேய்க் கரும்பு, ஓங்கிதின்

வளர்ந்து தனக்கு மேலேயுள்ள மாந்தளிர்கள் காய முற்றுச் சிதைந்து மடங்கும்படி செய்கிறது. இதனை,

'கொடிப்பூ வேழம் தீண்டியயல, வடுக்கொள மாத்து வண்டளிர் நுடங்கும் மணித் துறையூரன்' எனக் கூறுகிறார். இதனால் பேய்க் கரும்பு போன்ற பரத்தையின் செய்கையால் தலைவியின் மாந்தளிர் போன்ற உடல் மெலிவுற்று வருந்துகின்றது என்று தோழி குறிப்பால் உணர்த்துகிறாள்.

ஊரிலுள்ள சிறு விளையாட்டு மகளிர்கள் தங்கட்குரியதான தெருக்களில் விளையாடாமல் நீர்வாழ் பிராணிகளுக்குரிய நீர் நிறைந்த வரப்பிற்குச் சென்று வளை செய்து கொண்டு வசிக்கின்ற நண்டுகளைப் பிடித்து விளையாடுகிறார்கள். அந்நண்டுகள் அவர்களைக் கடித்ததினால் துன்புறுகின்றனர். இச்செய்கையினால் தலைவனுக்குரிய தகாத ஒழுக்கத்தை உள்ளுறை உவமம் பொருந்தப் புலப்படுத்துகிறார். அதாவது தலைமகன் தனக்கே உரியளான தலைவியை விட்டு நீங்கி அயலார் பலர்க்கும் உரியரான பரத்தையிடம் போய் இன்ப விளையாட்டில் திளைக்கிறான். அச்செய்கையால் பின்னர் தனக்கு வந்த கேடுகளை நினைந்து துன்புறுகின்றான்.

## தலைவியின் மேம்பாடு

தலைவன் தவறி நடந்த காலத்தும் தலைவியானவள் தாய் போல் தலைவனது குற்றத்தைப் பொறுத்துப் பின்னர் அவனைத் தழுவிக்கொள்வாள். இதனைத் தொல்காப்பியர்,

'தாய் போற் கழறித் தழீ இக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக் குரித்தென மொழிப'

என்று கூறுகிறார். இத்தகைய நிகழ்ச்சி ஒன்றை ஐங்குறுநூறு 85-ம் பாடலில் ஓரம் போகியார் உள்ளுறைப் பொருளில் வைத்துக் கூறியுள்ளார். தலைமகன் பரத்தைபால் நீண்ட நாள் தங்கிப் பின்னர் தலைவியிடம் செல்கின்றார். தலைவி தலைமகனைப் பார்த்து, அன்ப, உன் ஊரில் வாழ்கின்ற சேவற்கோழி தனது பெட்டைச் செம்மங்கோழியை விட்டுப் பிரிந்து விட்டது. பெட்டைக் கோழி தன் சுற்றத்துடன் சேர்ந்து வாழ்வதால் தன் சேவலைப் பிரிந்ததனால் ஆகிய துன்பம் தெரியாமல் தன் இனத்துடனே மகிழ்வுடன் கூவிக்கொண்டிருக்கிறது. அது போல் நீயும் என்னை விட்டுப் பிரிந்ததாலும் என் உறவினர்களுடன் கூடி வாழ்கின்றேன். நான் இப்பொழுது உன்னிடம் கூறுவது உனது பிரிவுத் துன்பத்தால் மெலிந்து வருந்திக் கூறுஞ்சொற்கள் மாத்திரம் அன்று, நீ பெருமை நிறைந்த குணங்களையுடையவன். உன் குலமும் செம்மையான ஒழுக்கத்தில் நிறைந்து நின்றது. அத்தகைய உயர்வுக்கு உனது தாழ்ந்த இந்தத் தீய ஒழுக்கம் மிகவும் தகுதியற்றது. உனது இத்தீய செயலைப் பிறர் காண்பாரானால் உன்னை நகைத்து ஏளனம் செய்வார்கள். அதனால் தான் நான் வருத்தத்தால் மெலிவடைகின்றேன் என்று கூறுகிறாள்.

இவ்வாசிரியர் திருவள்ளுவர் போலவே ஐங்குறுநூற்றில் தொடக்கத்தில் இல்வாழ்க்கையைச் சிறப்பித்துக் கூறுகிறார். இல்லறம் செம்மையாக நடை

பெறுவதற்கும் கற்பொழுக்கம் குன்ருமலிருப்ப தற்கும் அரசனது காவல் முதன்மையாக இருத்தலின் முதற்கண் சேர அரசர்களுள் ஒருவனுகிய ஆதன் அவினி என்ற அரசனை வைத்து,

'வாழி ஆதன் வாழி அவினி'

என்று வாழ்த்துகிருர்.

தலைவி தலைவனை முதல் நாள் எதிர்ப்பட்ட அன்றே கற்புக் கடன் பூண்டு ஒழுகுகின்ற சிறப்பை யும் தலைவி தலைவனிடம் பிணங்கிக் கொள்ளுதற்குக் காரணங்கள் மிகுதியும் உண்டாயிருப்பவும் தலைவி அதனை மிகுதியும் மனங்கொள்ளாத சிறப்பையும் ஐங்குறுநூற்றில் முதல் 10 பாடல்களில் பாராட்டி யிருப்பது தமிழ் மக்களின் கற்பின் பெருமைக்குச் சான்ருகும். இவர் அகநானூறு 316-ம் செய்யுளில் குலப்பெண்கள் கணவனை அதிகமாகக் கோபிப்பதி ஞல் வரும் தீமைகளை நன்கு விளக்கியுள்ளார்.

குறுந்தொகையில் 70-வது செய்யுளில் தலைவியை ஐம்புலனுக்கும் இன்பந்தருவாள் என்று கூறி யிருப்பது,

'கண்டு கேட்டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணேயுள'

என்ற குறட்பாவுக்கு இலக்கியமாக அமைந்துள்ளது.

இவர் கூறும் உவமைகள் பல. அவை பொரு ளோடு ஒத்த தன்மையால் நெருக்கம் உடையனவாய் நின்று உணர்வுக்கு இன்பஞ் செய்வனவாம். அவற் றுள் சிலவற்றைக் காண்போம். பெண்களின்

மேனிக்கு மாந்தளிரையும், தலைவியின் தோளிற்கு ஓடத்தையும் நண்டின் கண்ணிற்கு வேப்பம் பூவின் அரும்பினையும் பரத்தையின் மார்புக்கு பலர் படிந்து உண்ணும் குளிர்ந்த தடாகத்தினையும் உவமை கூறுகிறார். இழிந்தவளாகிய பரத்தையர் தோளுக்குக் கையால் பிடித்துத் தேய்ந்து வழுவழுப்பாகவும் பருத்ததாகவும் உள்ள உளுத்தங்காயை அடிக்கும் தடியை உவமை கூறுகிறார். சங்கத்துச் சான்றோர்களில் ஒருவராய ஓரம்போகியாரது செய்யுட்களில் உள்ள மாண்பும் பெருமையும் ஒரு சிறிது சுருங்கக் கூறப்பட்டன. இலக்கியச் சுவையே தம் வாழ்க்கை நலமெனக் கொண்டு இன்புறும் உணர்வுடைப் பெருமக்கட்கு இன்பவூற்றாகவுள்ள இத்தகைய சங்க நூலாராய்ச்சிகள் அமிழ்தினும் சிறந்ததாம். தமிழ் மக்கள் இயற்கைப் பொருளை நுனித்துக் கூறும் சங்க நூல்களை இனிது ஆராய்ந்து இன்புற்று மகிழ்வார்களாக. வாழ்க தமிழ் மொழி.

# உ. அம்மூவனர்

செவிக்கும் சிந்தைக்கும் இனியது செந்தமிழ் மொழி. இது தானே வளர்ந்தது ஒரு காலம். பின்னர் சான்றோர் பலர் தமிழ்ச் சங்கத்தின் மூலமாய் மொழியை வளர்த்தனர். தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச்சங்கம் என்ற மூன்று சங்கங்கள் வாயிலாகத் தமிழ் வளர்ந்து வந்தது. அவ்வப்போது பல நூல்கள் வெளி வந்தன. இடைச் சங்கப் புலவர்கள் அந்த நூல்களைப் பாகு பாடு செய்து தொகுத்து வைத்தனர். அவை பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க் கணக்கு எனப்படும். இவை சங்க நூல்கள் என வழங்கும்.

மக்களாய்ப் பிறந்தார் பெற வேண்டிய பேறுகள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம் வீடு, என்பன. இவற்றுள் இம்மைக்குரியன அறம் பொருள் இன்பம். அறத்தையும் பொருளையும் புறப் பொருள் என்பர். இன்பத்தை அகப் பொருள் என்பர். அறத்தாலும் பொருளாலும் அடைய வேண்டுவது இன்பமாம். இங்கே இன்ப மென்பது அன்பு கலந்த தலைவனும் தலைவியும் தம்முள் கூடுகின்ற காலத்தில் தோன்றி, பின்னர் இவ்வாறு இருந்த தென்று வெளிப்படக் கூற இயலாததாய் எப்போதும் உள்ளத்தாலேயே அனுபவிக்கக் கூடியது. இதனுலேயே இவ்வின்பத்தை அகப் பொருள் என்பர். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளாகிய இறைவனே அகப் பொருளுக்கு ஓர் இலக்கணத்தை ஏற்படுத்தினுன். தானும் நன் பாட்டுப் புலவனுய் சங்கம் ஏறி மொழி

யை வளர்த்தான். அது இறையனூர் அகப்பொருள் எனப்படும்.

கடைச் சங்க நூல்களுள் ஒன்றுன எட்டுத் தொகையில் அகப் பொருளைப் பற்றிக் கூறுவன ஐந்து நூல்கள். அவை, நற்றிணை குறுந்தொகை ஐங் குறுநூறு, கலித் தொகை, அக நானூறு என்பன.

இவற்றுள் ஐங்குறுநூறு என்பது மருதம் முதலிய ஐந்து திணைகளுக்கும் உரிய ஒழுக்கங்களைத் தனித்தனி நூறு குறுகிய பாக்களைக் கொண்டு அமைந்த நூலாகும். இதில் வரும் பாக்கள் மூன்று அடிச் சிற்றெல்லையும் ஆறு அடிப் பேரெல்லையும் கொண்டது. ஒவ்வொரு திணையிலும் ஒரு பொருளைப் பற்றிய பத்துப் பாடல்கள் கொண்ட ஒரு பத்தாக 10 பத்துக்கள் உள்ளன. இந்நூல் இயற்கைப் பொருள் களின் அழகையும் தமிழ் மொழியின் இனிமையை யும் நன்கு தெரிவிப்பது. தமிழ் நாட்டின் பழங்கால நாகரிகத்தையும், சில சரித்திரங்களையும் புலப்படுத்து வது. அகத்திணை நூல்களுக்குரிய உள்ளுறை உவ மங்களால் பொருளை விளக்குவது. இந் நூலின் ஐந்து திணைகளைக் குறித்து ஐந்து ஆசிரியர்கள் தனித்தனி யே பாடியுள்ளார்கள்.

இதன் இரண்டாவது பகுதியாகிய நெய்தல் திணையைக் குறித்துப் பாடியவர் அம்மூவனூர் என் பவர். கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். இவ ருடைய பெயர்க் காரணம் தெரியவில்லை. மூவன் என்னும் இயற் பெயர் அடை மொழி சேர்த்து அம் மூவனூர் எனப்பட்டது என்பர். இவர் சேர நாட்டு

ஞாயிறெனவும் ரத்தினமென்றும் கூறப்படுவர். நெய்தல் திணையில் மிகப் பயின்றவர். அதன் வளங்களை விளக்கமாகப் பாடுதலில் வல்லவர். சேர பாண்டிய மன்னர்களாலும் காரி என்னும் வள்ளலாலும் ஆதரிக்கப் பெற்றவர். சேர நாட்டிலுள்ள தொண்டி நகரமும் மாந்தை நகரமும், பாண்டி நாட்டிலுள்ள கொற்கை நகரமும், நடு நாட்டிலுள்ள கோவலூரும் இவரால் போற்றப்பட்டிருப்பதால் இவர் அந் நகரங்களில் வாழ்ந்தவர் என்றும் இவர் காலத்தில் அவைகள் மிக விளக்கமுற்றிருந்தனவென்றும் தெரிகின்றன. இவர் ஐங்குறுநூற்றில் நெய்தல் திணையில் நூறு பாட்டுக்களைப் பாடியுள்ளார். இவையல்லாமல் இவர் பாடல்களாக நற்றிணையில் பத்துங் குறுந் தொகையில் பதினொன்றும் அகநானூற்றில் ஆறும் உள்ளன.

ஐந்திணைகள் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை முல்லை என்பன. ஐங்குறுநூற்றில் இம்முறையே திணைகள் வகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மருதம் என்பது வயல் பிரதேசம். நெய்தல் என்பது கடற் பிரதேசம். குறிஞ்சி என்பது மலைப் பிரதேசம். பாலை என்பது நீரில்லாக் கடுநிலம். முல்லை என்பது காட்டுப் பிரதேசம்.

ஐந்திணைகளுக்குரிய நிகழ்ச்சிகள் மருதத்துக்குத் தலைவனும் தலைவியும் ஊடலும், நெய்தலுக்கு இரங்கலும் குறிஞ்சிக்குப் புணர்தலும் பாலைக்குப் பிரிதலும் முல்லைக்கு இருத்தலும் ஆகும். இதை, 'போக்கெல்லாம் பாலை புணர்தல், நறுங் குறிஞ்சி ஆக்கஞ் சேர் ஊடல், அணி மருதம், நோக்குங்கால் இல்லிருக்கை

முல்லை இரங்கல் நறுநெய்தல், சொல்லிருக்கும் ஐம்பாற்றுறைகை' என்னும் பாட்டால் அறியலாம்.

இவற்றுள் நெய்தலுக்குரிய இடம் கடல். நிகழ்ச்சி இரங்கல், அதாவது தலைவி மனம் வருந்துதல். இவ்விரக்கமானது கடல் சார்ந்த இடத்தே நிகழும். கடலின் அலைபோல உயர்ந்து தாழும் இயல்பு மனதிற்குள்ளதாம். கடல் வழிச் சென்றாரை எதிர் பார்த்திருக்கும் இடம் நெய்தல். தலைவனைப் பிரிந்துள்ளபோது அவன் வரவை விரும்பி இரக்கம் தோன்றும். கடற் காட்சி இரக்க உணர்ச்சியை உண்டாக்கும் என்பர். மேலும் கடல் அலை உயர்ந்து தாழ்தல். மிகுந்த துயரம் குறைந்த காலத்து ஏற்படும் இரக்கத்தை ஒத்திருப்பதாலும், கடல் முதலியவற்றைத் தலைவி கண்ட போது இரக்க உணர்ச்சியை உண்டாக்குதலாலும் இரங்கலை நெய்தலுக்கு உரிப் பொருளாகக் கொண்டனர் ஆன்றோர். இத்தகைய நெய்தல் திணையின் பெருமைகளைக் குறித்து ஆசிரியர் அம்மூவனார் ஐங்குறுநூற்றில் பத்துப் பிரிவாகப் பகுத்து ஒவ்வொன்றுக்கும் பத்துப் பாடல்களாகப் பத்து பத்தைப் பாடியுள்ளார். அவை தாய்க்குரைத்த பத்து முதலாக வளைப்பத்து ஈறாக உள்ளன. இவற்றுள் சில பாடல்களைப் பார்ப்போம்.

தலைவன் தலைவிகளுடைய இன்ப ஒழுக்கத்தில் களவு என்றும் கற்பு என்றும் இருவகை உண்டு. களவு என்பது பிறர் அறியாதபடி நிகழ்த்தும் ஒழுக்கம். கற்பென்பது வெளிப்படையாய் நிகழ்த்தும் இல்லற வாழ்க்கையாம். களவொழுக்கத்தில் தலைவி

யை விட்டுத் தலைவன் பிரிதல் உண்டு. பொருள் காரணமாகத் தூர இடம் செல்லாமல் ஓரிடத்தில் வசிப்பவனும் பிரிதல், இதை ஒரு வழித்தணத்தல் என்பர். மனத்தை இடையில் நிறுத்தி வைத்துப் பொருள் தேட வேண்டித் தூர இடம் செல்லல். இதை வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் என்பர். இவ்வகையில் தலைவியைப் பிரிந்த தலைவன் ஒரு நாள் இரவில் அதிக நேரம் ஆகியும் தூக்கங் கொள்ளவில்லை. பக்கத்திலுள்ள நண்பர் அவனை நோக்கி 'தூக்கம் இல்லையே ஏன்?' என்று கேட்டான் தலைவன் நண்பனிடம் உண்மையைக் கூற விரும்பி 'ஒரு நங்கை ஒளிபொருந்திய வளையலை அணிந்தவள் எனது நெஞ்சத்தை இடமாகக் கொண்டாள்' என்றான். நண்பர் அவ்விதமாயின் 'நன்றாய் உறங் கலாமே' என்றான். தலைவன் தூக்கமே இல்லை என்றான். ஒரு புலவர் யார் யாருக்குத் தூக்கமில்லை எனக் காட்டுகின்றார். 'கள்வம் என்பார்க்கும் துயி லில்லை காதலி மாட்டுள்ளம் வைப்பார்க்கும் துயி லில்லை. ஒண்பொருள் செய்வம் என்பார்க்கும் துயி லில்லை. அப்பொருள் காப்பார்க்கும் இல்லை துயில்' என்று பாடியுள்ளனர். எனவே தலைவியினிடத்தில் அன்பு கொண்ட தலைவனுக்கும் தூக்கமில்லை. மேலும் அவன் 'என் மனம் கடலின் அலை போல் கொந்தளிக் கிறது' என்கிறான். கடலைக் கூறும் போதே சேர நாட்டுத் தொண்டி நகரத்தையும் சேர்த்துக் கூறு கின்றான். 'வண்டுகள் ஒலிக்கின்ற குளிர்ச்சியான தொண்டி நகரத்துறையின் கடல் அலை கொந் தளிப்பது போல என் மனமும் கொந்தளிக்கிறது.

கடல் அலை மேலே எழுகிறது. விழுகிறது. ஓங்கி வீசுகிறது. மீண்டும் பின் வாங்குகிறது. திவலை தெறிக்கிறது. உள்ளிருந்து பொருள்களை மேலே கொண்டு வருகிறது. ஓ என்று அலறுகிறது. இரவிலும் ஓயவில்லை. இவ்வாறே என் மனமும் பலவாறு வேதனைப் படுகின்றது. கொந்தளிக்கிறது. இதனால் தூக்கமில்லை என்கிறான். தொண்டி நகரத்தைத் தற்போது அகலப் புழை என்பர். இக்கருத்துக்களைக் கொண்ட பாட்டைப் பார்ப்போம்.

> 'ஒண்டொடி அரிவை கொண்டனள் நெஞ்சே
> வண்டிமிர் பனித்துறைத் தொண்டி ஆங்கண்
> உரவுக் கடல் ஒலித்திரை என
> இரவினானும் துயில் அறியேனே.'

இது தொண்டிப்பத்தில் உள்ள செய்யுட்களில் ஒன்று.

இனி வேறு பாடலுக்குச் செல்வோம். தலைவி தக்க பருவத்தளாய் இருப்பதைக் கருதிய பெற்றோர், அவளைப் புறத்தே செல்லவிடாமல் வீட்டினுள்ளே இருத்த முயல்கின்றனர். இது இற்செறிப்பு எனப் படும். களவு நிலையில் இருக்கும் தலைவன் காவல் மனைக்குப் புறமாயுள்ள ஓர் இடத்தில் இருக்கின்றான். அந்த இடம் தோழி தலைவியர்க்குள் நிகழும் செய்திகளை மறைந்தறிதற்கு அனுகூலமாய் உள்ள இடம். இதைச் சிறைப்புறம் என்பர். அப்போது தலைவன் செவியிற்படும்படி தலைவி தோழியை நோக்கித் தலைவனிடம் தனக்குள்ள அன்பை வெளிப்படுத்தும் வகையில் சில செய்திகளைக் கூறுகின்றாள். 'தோழியே ஒன்று சொல்வேன், கேட்பாயாக: நமது தலைவன்

பாணன். நெய்தல் நிலத் தலைவன் மீன் பிடிப்பவன். உப்பங்கழியின் பக்கத்தில் காலை நேரத்தில் தூண்டில் முள்ளில் உணவைப் பொருத்திச் சிறிய மீன்களைக் கொன்று பிடிப்பான் அவனுடைய உறவை அவனை மணப்பதால் ஏற்படும் தொடர்பைப் பெறுதற்குரிய நல்வினையை நாம் முன்னமே செய்யவில்லை. அவனைப் பிரிந்தும் வாழ்வதற்கு வல்லமையுடையோமோ? இல்லை. இவ்வாறு கூறுவதன் பயன் தலைவன் விரைவில் வந்து யாவரும், காண மணந்து கொள்ள வேண்டுமென்று அறிவுறுத்துவது.

இதில் நெய்தலுக்குரிய இரங்குதலை அழகாகக் காட்டுகின்றார் ஆசிரியர். பிரிவுத் துன்பம் யாவற்றினும் கொடிது. அன்பு கொண்டவரைப் பிரிதல் ஆற்றொணுத் துன்பம் தரும். 'பசைந்தாரிற் பிரிதலின் தீப்புகுதல் நன்று' என்பர் ஆன்றோர். தலைவனுடைய பிரிவாற்றுமையை நினைந்து தலைவி வருந்துகின்றாள். இதில் உள்ளுறை உவமமாக மற்றொரு பொருளையும் காட்டுகின்றார். உள்ளுறை உவமம் என்பது வெளிப்படையானன்றிக் குறிப்பாய்ப் பொருளைப் புலப்படுத்துவது. சொல்லிய சொல்லால் உணரப்படாமல் ஆராய்ந்துணரும் தன்மையுடையது. இதை உவமப்போலி என்றும் கூறுவர். 'சினைக் கயல்மாய்க்குந் துறைவன். என்பதில் தலைவனுடைய கொடுமைக் குணம் காட்டப்பட்டது. இதன் மூலம் அறியப்படும் உள்ளுறைப் பொருள் தலைவன் களவொழுக்கத்தில் மிகவும் மகிழ்ச்சி கொண்டு, மணம் செய்து கொள்ளாது நம்மைத் துன்புறுத்துகின்றான் என்பது. இக்

கருத்துக்களை அமைத்து அம்மூவனார் பாடிய பாடலைப் பார்ப்போம்.

> ' அம்ம வாழிதோழி பாணன்
> சூழ்கழி மருங்கின் நாளிரை கொளீஇச்
> சினைக்கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை
> பிரிந்தும் வாழ்துமோ நாமே
> அருந்தவம் முயறல் ஆற்றாதேமே '

இது தோழிக்குரைத்த பத்தில் உள்ள பாடல்களில் ஒன்று.

இனி வேறு பகுதிக்குச் செல்வோம். தலைவன் ஒருவன் களவொழுக்கத்தில் இருக்கின்றான். தலைவியை மணந்து கொள்ளவில்லை ஒரு நாள் தலைவிக்குக் கைவளை கொண்டு வந்து கொடுத்தான். அப்போது, பக்கத்திலிருந்த தோழி, அவனிடம் சில செய்திகளைச் சொல்லி உரையாடுகின்றாள். 'நெய்தல் நிலத் தலைவனே உனது கடற்கரையில் வலம்புரிச் சங்குகள் ஊர்ந்து செல்லும் வலம்புரி என்பது சுழிகள் வலமாகப் பெற்றுள்ள சங்குகள். சங்குகளில் சிறப்பாகச் சொல்லப் பெறுவது மேலும் மிகுந்த ஒளியையுடைய முத்துக்கள் அவ்விடத்தில் இருள் நீங்கும்படி ஒளி செய்யும். இத்தகைய பெருமைகளையுடைய நெய்தல் நிலத்திற்குத் தலைவனாய் இருக்கிறாய். ஒலிக்கின்ற நீரில் தோன்றிய சங்கினாலாய வெண்மையான வளையல்களைத் தலைவிக்குக் கொடுத்தாய். முன்பு தந்த வளையல்கள் உனது பிரிவினால் தலைவியின் உடல் மெலிவடையக் கையை விட்டு நீங்கின. இவை

தலைவியின் கைகளை விட்டு நீங்காத நலத்தை உடையனவோ என்று கேட்கின்றாள் தோழி. இவ்வாறு தோழி கூறியதன் காரணம் விரைவில் வந்து மணந்து கற்பொழுக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்று தலைவனைத் தூண்டியதாகும். பொதுவாகத் தலைவன் உடன் உறையும்போது தலைவியின் உடல் நலமுற்றிருப்பதும், அவன் பிரிந்த காலத்தில் மனத்துயரால் உடல் மெலிவதும் இயல்பு. உடல் மெலிந்த காலத்தில் கைகளில் அணிந்துள்ள வளையல்களும் தாமே நீங்கி விடும். பிற ஆசிரியர்களும் இம்முறையில் ஆங்காங்கு கூறியுள்ளதைக் காணலாம். ஒரு புலவர் 'பொருளாக்கற்கு ஏழையான் செல்வன் எனப் புகலா நிற்ப, விரல் ஆழிவளையாயிற்றவட்கு' என்கிறார். 'பொருள் தேடும் பொருட்டுச் செல்லப் போகின்றேன்' என்று தலைவன் சொன்னவுடனேயே விரல் ஆழி கைவளையாகும்படி தலைவி அவ்வளவு மெலிந்து விட்டாள். இவ்வாறான கருத்துக்களைக் கொண்ட பாடலைப் பார்ப்போம்.

> 'வலம்புரி உழுத வார்மணல் அடைகரை
> இலங்கு கதிர் முத்தம் இருள் கெட இமைக்கும்
> துறைகெழுகொண்கன் தந்த
> அறைபுனல் வால்வளை நல்லவோ தாமே'

இதில் முத்தம் இருள் கெட இமைக்கும் துறைவன் என்பதன் உள்ளுறைப் பொருள் இவளுக்கு வருகின்ற தீங்கை விரைவில் நீக்கி மணந்துகொள்ள வேண்டும் என்பதாம். இது வளைப்பத்தில் உள்ள பாடல்களில் ஒன்றாகும்.

அகப் பொருட் பகுதியில் தழை கொடுத்தல் என்பது ஒன்று. இதைச் சிறந்த பகுதியாகக் கொண்டு புலவர் போற்றுவர். தழை என்பது தளி ராலும் மலராலும் செய்யப்படுவதோர் ஆடையாகும். களவொழுக்கத்தில் நிற்கும் தலைவன் தலைவியை விரைவில் மணந்து கொள்ளப் போவதாகச் சொல் லித் தழை ஆடையைப் பரிசமாகத் தோழியின் மூலமாய்த் தலைவிக்கு அனுப்புவான். இது திரு மணத்திற்கு முன்னே நிச்சயம் செய்வது போன்ற ஓர் செயலாகும். தழையைப் பெற்ற தலைவி அத் தழையைப் பலவாறு போற்றி மகிழ்வாள். இத் தழையைப் பற்றிய பாட்டுக்குச் செல்வோம்.

கடல்நீர் குவித்த மணலில் புலிநகம் போன்ற மலர்களைத் தரக்கூடிய கொன்றை மரங்கள் உண்டு. அம்மரங்களில் மலரில்லாத காலங்களில் பெண்கள் அதன் தழைகளை விரும்புவார்கள். அத்தகைய நெய் தல் நிலத் தலைவன் ஒருவன் தலைவிக்குத் தழை கொடுத்தனுப்ப எண்ணுகிறான். ஆனால் தழை கொடுக்காமல் அதன் விலையாக நாட்டை வழங்கு கின்றான். இச் செய்தியைக் கேட்ட தோழி மட்டில் லாத மகிழ்ச்சி கொண்டு தலைவியிடம் சென்று தெரி விக்கின்றாள். தலைவியும் இந்த மங்கலச் செய்தியைக் கேட்டு மகிழ்கின்றாள். இக்கருத்துக்களுடைய பாட் டைப் பார்ப்போம்.

> ‘ எக்கர் ஞாழல் மலரின் மகளிர்
> ஒண்டழை அயரும் துறைவன்
> தண்டழை விலையென நல்கினன் நாடே ’

இது தோழி உவந்த உள்ளத்தவளாய்த் தலைவிக்குச் சொல்லியது. 'ஞாழல் மலரில்லாத மகளிர் அதன் தழையை விரும்பும் துறைவன், 'என்பதன் உள்ளுறைப் பொருளாவது, மலரை விரும்பிய மகளிர் அது இல்லாமையால் அதன் தழையை விரும்பியதுபோல், உலகையே வழங்க எண்ணிய தலைவன் அஃது இல்லாமையால் நாட்டை வழங்கினான் என்பதாம். இது ஞாழற்பத்து என்னும் பிரிவில் உள்ள பாடல்களில் ஒன்று.

பிற புலவர்களும் தழையின் இயல்புகளைப் பல வாறு கூறியுள்ளார்கள். ஓர் தலைவி தலைவன் மீதுள்ள அன்பினால் அவன் தந்த தழையைப் பொடி செய்து அரைத்து தன் உடலில் பூசிக் கொள்ள விரும்பினள். மற்றொரு தலைவி தழையைக் கை குவித்து வணங்கி வாங்கினாள். அதனைப் புகழ்ந் தாள். அன்பினால் தன் உடம்பில் அணைத்தாள். தழையாகக் கருதாமல் தலைவனாகவே பாவித்தாள். இக்கருத்துக்கள் பழமலை அந்தாதியிலும் தஞ்சை வாணன் கோவையிலும் காணப்படுகின்றன.

இத்தகைய அகப் பொருள் நுட்பங்களையும் உள்ளுறைப் பொருள்களையும் பழந்தமிழ்க் கொள் கைகளையும், பிற நயங்களையும் அம்மூவனார் பாடிய நெய்தல் திணைக்குரிய பாடல்களில் தெளிவாய்க்காண லாம்.

# 3. ஓதலாந்தையார்

நமது தாய்மொழியாகிய செந்தமிழ் புகழ் வாய்ந்து இருப்பதற்கு அதனுடைய சிறந்த இலக்கியமே காரணமாகும். பண்டைக் காலத்தில் மூன்று சங்கங்கள் இருந்தன என்பதை நாம் அறிவோம். அச்சங்க காலத்து நல்லிசைப் புலவர்கள் நம் தமிழுக்கு அன்றும் இன்றும் என்றும் அழியாச் செல்வத்தை உண்டாக்கிப் போயினர். அந் நல்லிசைப் புலவர் பெருமக்கள் பல அரிய நூல்களையும் செய்யுள்களையும் இயற்றினர். அவை சங்க இலக்கியம் எனப் ]டும். சங்கம் மருவிய நூல்களைப் பாட்டு, தொகை, கீழ்க் கணக்கு என முத்திறப்பட வகுத்துள்ளனர். அவை பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்பனவாம்.

எட்டுத் தொகை என்பது நற்றிணை குறுந் தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை அகநானூறு புறநானூறு என்னும் நூற்களைக் கொண்டன.

அவற்றுள் குறுந்தொகையில் மூன்று பாடல்களையும், ஐங்குறுநூற்றில் நான்கா நூறுகிய பாலைத்திணையையும் பாடிய நல்லிசைப் புலவர் ஓதலாந்தையாராகும். இவர் கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். இவரைப் பற்றி இன்று நாம் சற்றுத் தெரிந்து கொள்ளுவோம். இவரைப் பற்றித் தெரிந்து கொள்ளும் முன் ஐங்குறுநூறு என்றல் என்ன என்பதை அறிந்து கொள்வது இன்றியமையாததாகும்.

சங்க காலத்துப் புலவர்களின் கவியாற்றலை அறிந்து கொள்வதற்கு ஐங்குறுநூறும் ஒரு கருவி யாகும். இது கடைச் சங்கப் புலவர்கள் அருளிச் செய்த நூல்களாகிய எட்டுத் தொகைகளில் மூன்ரு வது. சொற்சுவை பொருட்சுவைகளில் சிறந்தது, பொருட்களின் இயற்கையழகையும் தமிழ் மொழி யின் இனிமையையும் நன்கு தெரிவிப்பது. நம் தமிழ் நாட்டின் பழைய காலத்தின் நிலைமையையும் சில சரித்திரங்களையும் புலப்படுத்துவது. பொருள் இலக் கணத்தின் அகம் புறம் இரண்டனுள், அகத்தின் பகுதிகளுக்கு இலக்கியமாக அமைந்துள்ளது.

நற்றிணை முதலியவற்றிலுள்ள பாக்களைக் காட்டி லும் அடிவரையறையிற் குறைந்து நூறு நூறு பாக் களால் மருத முதலிய ஐந்திணை ஒழுக்கங்களைத் தனித் தனியே விளக்குகின்றமையின் இந்நூல் ஐங்குறுநூறு என்று பெயர் பெற்றது.

"மருதம் ஓரம்போகி நெய்தல் அம்மூவன்
கருதும் குறிஞ்சி கபிலன்—கருதிய
பாலை ஓதலாந்தை பனிமுல்லை பேயனே
நூலை யோதைங்குறு நூறு"

என்ற செய்யுளால் இதில் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை இயற்றியவர்களின் பெயர்கள் தெரிய வருகின்றன. பண்டைத் தமிழ் மக்கள் முல்லை, குறிஞ்சி முதலியவற்றிற்குத் திணை வகுத்தனர். திணை என்ருல் ஒழுக்கம். பாலைக்குப் பிரிதலைக் கூறுவர். பாலையாவது, காதலால், கலந்த இருவரது பிரிவு ஒழுக் கம். இவ்வொழுக்கம் ஏனைய ஒழுக்கங்களை விடச்

சிறந்த தென்று கூறுதல் மிகைபடக் கூறியதாகாது. காமம் சிறத்தற்கு இவ்வொழுக்கமே இன்றியமை யாத தொன்ருய் வேண்டப் படுவது. "ஊடுதல் காமத்திற் கின்பம்" என்பது திருவள்ளுவர் வாக்கு.

பாலை பாடிய ஓதலாந்தையாருக்கு இப்பெயர் வரக் காரணம் என்ன என்பதைச் சற்று ஆராய் வோம். ஆந்தையார் என்ற உடனே ஆந்தை என்ற பறவையோடு இப்பெயரைச் சம்பந்தப்படுத்தக் கூடாது. அஞ்சில் ஆந்தையார், சிறைக்குடியாந்தை யார், பிசிராந்தையார், ஓதலாந்தையாரென அறியப் பட்ட ஆந்தையார் நால்வர். ஓதல் என்ற அடை மொழி தொழிலின் காரணமாய் வந்தது. இவர் மறையை ஓதும் தொழிலைச் செய்தனர் போலும். ஏனை மூவரும் இடத்தால் பெயர் பெற்றனர். பிசிர் என்ற ஊரில் வாழ்ந்ததால் ஒருவர் பிசிர் ஆந்தையார் எனப் பெயர் பெற்றனர். ஆந்தையார் என்றதில் ஆர் சிறப்பு விகுதியாகும். ஆந்தை என்னும் சொல்லை ஆதன் - தந்தை எனப் பிரிப்பர். இப் பெயரை ஆசிரி யர் தொல்காப்பியனுர்

"ஆதனும் பூதனும் கூறிய வியல் பொடு
பெயரொற்றகரந்து வரக் கெடுமே"

என்று கூறியுள்ள இச்சிறப்பு விதிச் சூத்திரத்தால் மேற்கூறியபடி வந்தது எனக் கூறுவாரும் உளர். ஒரு சிலர் ஆதன் தந்தை என்னும் பெயரே ஆந்தை என மருவிற்று என்பர். ஆதன் என்பவன் மகனுகவும் அவனுக்குத் தந்தையாயினமையால் ஆந்தை என

இவர் சூட்டப் பெற்றனர் போலும் என்று கருதுவர். ஆதன் தந்தை என்பது மகனுல் தந்தைக்கு கூறும் முறையில் அமைந்த பெயர் இல்லையென்று கருத இடம் உண்டு. ஏனெனில் சாமாலியர் குழுவினுள்ளும் தந்தையைக் கொண்டே மகன் சிறப்பிக்கப் படுதல் பெருவழக்காயிருக்கிறது. இன்னும் சிலர் ஆந்தை என்பது பண்டைக் காலத்தே சாத்தன், கொற்றன் என்பவை போல் பலருக்கும் இயற்கைப் பெயராகவே இடப்பெற்று வழங்கி வந்த பெயர் என்று கொள்ளுதலும் பொருந்தும்.

ஓதல் என்பது இவர்தம் சிறப்பினைக் குறிக்கும். ஐந்திணைகளையும் பாடுதலில் பாலைத்திணையைப் பற்றிப்பாடுதலே மிகவும் கடினம். அதனுலன்றே பெருங் கடுங்கோ என்ற புலவரைப் பாலைப் பாடிய பெருங் கடுங்கோ என்று அழைத்தனர். பாலை நிலம் என்பது வெப்பம் மிக்கு வளமற்று வரண்ட கொடிய மணற் பெருவெளி. புல் பூண்டுகள் தாமும் வெப்பமிகுதியால் அங்கு முளைக்க மாட்டா. புள்ளும் விலங்குகளும் கூட அங்குக் காணப்படா. இத்தகைய கொடிய பாலை நிலத்தை இனிமையும் சுவையும் நிகழுமாறு அழகு செய்து பாடுதல் என்பது அரியதே. இதனைக் கருதியே பாலைத் திணையைப் பாடிய நம் ஓதல் ஆந்தையார் எத்துணைக் கல்வி நலமும் புலமை நலமும் மிக்கு இருந்தாராகல் வேண்டும். இவரது கல்வி நலத்தின் ஒப்புயர் வின்மையை ஓர்ந்துணர்ந்தே ஓதல் என்னும் சிறப்படையினை இவர் தம் பெய

ரொடு சேர்த்து வழங்குவாராயினர் போலும் பண்டைப் புலவர் பெருமக்கள்.

இங்ஙனம் கல்வி நலம் குறித்துச் சிறப்பித்துப் பாராட்டப் பெற்ற இவர் ஐங்குறுநூற்றின் கண் ஏனைப் புலவர்கள் செய்ததனைப் போலவே தாம்பாட மேற்கொண்ட பாலைத்திணையினைப் பத்து வகைத் தலைப்புகளில் பகுத்துக் கொண்டு ஒவ்வொரு பகுப்பினைப் பற்றியும் பத்துப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார்.

தலைவன் தலைமகளைப் பொருள் ஈட்டற்கேனும், அரசன் ஏவல் குறித்தேனும் கல்விகுறித்தேனும் பிற வற்றிற்கேனும் பிரிந்து செல்வான். அங்ஙனம் தலைவன் பிரிந்துசெல்லும் வழி ஒரு பெரும் பாலைவனம் இருப்பதாகவும் வைத்து, அப்பாலை நிலக்கருப்பொருள் சிறப்புக் களெல்லாம் விரவி வர பிரிவுணர்ச்சியும் ஆற்றாமை உணர்வும் மேலோங்கி மிக் கெழுந்து தோன்றி உளத்தினை உருக்குமாறு அழகுறப் புனைந்து பாடுவதாம். ஆதலின் பாலைத்திணையைப் பல பாகுபாடு செய்து கொண்ட இப்புலவர் பாலை என்பது பிரிவாதலால், தலைவன் பிரிந்து செல்ல நினைந்தனனாக அவன் செல்லும் வழி ஒரு பெரிய பாலை நில மாதலையும் அவன் பிரிந்தால் தலைவி அது பொறாது இறத்தலும் கூடும் என்பதனையும் எடுத்துக் கூறித் தோழியாயினாள். தலைவன் பிரிந்து செல்லாமல் தடுத்து நிறுத்தியதாக முதலில் 'செலவு அழுங்கு வித்த பத்து' தலைப்பினால் தொடங்கிப் பாடுகின்றார். பின்னர் தலைவன் செல்லுதலையும் வழியில் பாலை நிலம் வருதலையும்

சென்ற தலைவனை நினைந்து தலைவி இல்லில் வருந்துதலையும், காதலர்க்கு இன்ப உணர்வு தோன்றுதற்கும், பாலை நிலம் மிக்க வெம்மை உறுதற்கும் ஏதுவாக இளவேனிற் காலம் வருதலையும், நினைவு கூர்ந்து பாலை நிலத்தின் வெப்பம் கருதாது வருவதனை உணர்ந்து தோழி அதனைத் தலைவிக்குக் கூறி ஆற்றுவித்தலையும் முதலாகச் செலவு பத்து, இடைச் சுரப் பத்து, தலைவி இரங்குபத்து, இளவேனிற் பத்து, வரவுரைத்த பத்து, மறுவுதரவுப் பத்து ஈறாகப்பாடுகின்றார்.

அவருடைய பாடல்களில் சிலவற்றை இங்கு பார்ப்போம்.

தலைவன் பொருள் ஈட்டி வர எங்கேனும் பிரிந்து செல்லக் கருதுகிறான். தோழியானவள் அவனைச் செல்லாது தடுக்க முயல்கின்றாள். அவள் எங்ஙனம் வல்லமையாகப் பேசித் தன் கருத்தினை நெகிழ விடுமாறு செய்கின்றாள் பாருங்கள். தலைவ, நீ பிரிந்து செல்கின்றாய். நீ செல்லும் வழியோ ஒரு மலை வழி. அம் மலையோ பசுமையற்று வறண்டு இருக்கின்றது. அங்கே உண்ணுதற்கேதும் கிடைக்கப்பெறாது மிக்க பசியோடு களிறு பிடியைத் தழீஇக் கொண்டு வேறிடங்கட்குச் செல்லாமல் வருந்துகின்றது. அத்தகைய இடத்துச் சென்று என்ன பொருள் பெறப் போகின்றாய். ஒன்றுமில்லை, நீ பிரிந்து செல்வதனால் நின்னையே நினைந்து வருந்துமாறு தலைவிக்குத் துன்பம் விளைத்தலே நீ செல்வதன் பயன் அன்றி நின் செலவு வேறு என்ன பயனைத் தரப் போகின்றது என்கிறாள்.

"களிறு பிடி தழீ இப் பிறபுலம் படராது
பசிதலை வருந்தும் பைதறு குன்றத்துச்
சுடர்த்தொடிக்குறுமகள் இனைய
எனைப் பயம் செய்யுமோ விடலை நின் செலவே."

விலங்குகளாகிய களிறும் பிடியும் கூட ஒன்றனை யொன்று பிரியாமல் அத்துணையன்புடையனவாக இருக்கின்றன. தங்களுக்கு அத்துணை அன்பில்லையே என்ற எள்ளல் குறிப்பு இதன் கண் அமைந்துள்ளது. இங்ஙனம் வரும் சுவை நலம் மிக்க இவர் தம் பாடல்கள் பல.

இடைச் சுரப்பத்தில் ஒரு செய்யுளைப் பார்ப்போம். பிரிந்த தலைமகன் இடைச் சுரத்தின் அதாவது செல்லும் வழியில் உள்ள வரண்ட நிலத்தின் கண் தலைமகள் குணத்தை நினைத்து இறங்கிச் சொல்லியது.

இவ்வழகு மிக்கவளாகிய நம் தலைவியின் குணம் புள்ளிகளையும் வரிகளையும் கொண்ட நீண்ட பெரிய துதிக்கை நிலத்தின் வெப்பத்திற்கு அஞ்சி நிலத்தைத் தொட்டுச் செல்லாது தூக்கிக் கொண்டு செல்லும் வெயில் உலர்ந்த சோலையில் உள்ள மூங்கில் நிறைந்த பாலை நிலத்தில் வெப்பத்தைச் செய்யாது குளிர்ச்சியைச் செய்தது என்று நயம்பட கூறுகிறார்.

தலைவன் பிரிவில் தலைவனை நினைத்து வருந்துகின்ற நிலையைத் தெள்ளத் தெளிய உரைக்கும் வர் ஆற்றல் என்னே!

தலைமகள் தோழியிடம்

"தலைவர் சென்ற வழியில் உள்ள மிருகங்கள் அவரிடம் காதலியை நீத்துப் பிரிதல் மிகக் கொடியது. ஆகையால் செல்லாதீர் என்று சொல்லாமல் இருந்த மையால் மிகவும் இரக்கமற்றன என்ற கருத்தைப் பின் வரும் செய்யுள் விளக்கும்

"அம்ம வாழி தோழி யென்னது உம்
அறனில மன்ற தாமே விறல் மிசைக்
குன்று கெழு கானத்த பண்பு இல்மாக்கணம்
கொடிதே காதலிப் பிரிதல்
செல்லல் ஐய என்னாதவ்வே".

வரவுரைத்த பத்தில் பிரிந்த தலைமகன், வரவு உணர்ந்த தோழி கூறும் கூற்று பாராட்டப்படத் தக்கது. நன்கு தேர்ந்தெடுக்கப்பட்ட ஆபரணங்களை அணிந்துள்ள தலைவியே/நம் காதலர்/மிக அன்புடைய பெண் நாயுடன் சேர்ந்துள்ள ஆண் செந்நாயானது தன் வழியில் எதிர்ப்பட்ட குட்டியுடன் வந்த பெண் மானையும் தன் உணவாகக் கொள்ளாமல் அவ் விடத்தை விட்டு அகன்று செல்லும். தாண்டுதற் கருமையான பாலை நிலத்திலிருந்து உன் அரிய பண்பு களை நினைத்து மிக விரைவாக வந்து சேர்ந்தார் என் பது எவ்வளவு இனிமையாக இருக்கிறது.

'ஈர்ம் பிணவு புணர்ந்த செந்நாய் ஏற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்
அறிய சுரன் வந்தனரே
தெரியிழை அரிவை நின்பண்பு தர விரைந்தே"

இறுதியாக புலவர் பாடிய பாடல்களில் சொல் நயம் பொருள் நயம் செறிந்துள்ள ஒரு பாடலைப் பார்ப்போம்.

சென்ற தலைவனும் தலைவியும் தலைவனின் இல்லில் மணம் முடிந்து மீண்டும் தலைவியின் இல்லத்திற்கு வர விரும்பும் தலைவி தாயின் உணர்ச்சியையும் ஆவலையும் பின் வரும் செய்யுள் உள்ளங்கை நெல்லிக் கனி போல் காட்டுகின்றது.

> "மறுவி தூவிச் சிறு கருங்காக்கை
> அன்புடைய மரபினின் கிளையோடாரப்
> பச்சூன் பெய்த பைந்நிணவல்சி
> பெலம்புனை கலத்தில் தருகுவென்மாதோ
> வெஞ்சின விறல் வேற்காளையோ
> டஞ்சி லோதியை வரக் கரைந்தீமே"

இதன் பொருளாவது; குற்றமில்லாத இறகுகளையுடைய கரிய நிறமுள்ள காக்கைகளே மிக்க கோபத்தினையும் வெற்றி தரும் வேலினையும் உடைய காளை போன்ற தலைவனுடன் அழகிய கூந்தலையுடைய என் மகளை இவ்விடம் வந்து சேரும்படி கத்துங்கள். அங்ஙனம் கரைந்து அவர்கள் வந்து சேரின் அன்பாகிய குணம் பொருந்திய உங்கள் சுற்றத்தாருடன் உண்ணுதற்கேற்ப பச்சை ஊண் போட்டுச் செய்த செவ்விய மாம்சமாகிய உணவைப் பொன்னால் செய்த பாத்திரத்தில் கொடுப்பேன் என்று தாய் காகத்திற்குப் பாராய்க்கடன் உரைக்கின்றாள் நற்றாய்'

பாலைத் திணையில் பிரிதலும் பிரிதல் நிமித்தமுமே பயின்று வருவனவாயினும் "தலைவி தலைவனை மணந்து அவனுடன் இனியளாய் இன்று வரும்" எனக் கேட்ட செவிலி அதனை நற்றாய்க்குக் கூறும் செய்யுளை ஈற்றில் அமைத்து இத்திணைக்கு மங்கல முடிவு கொடுத்திருத்தல் மிக அழகாய் உள்ளது.

## 4. கபிலர்

'நல்லிசை வாய்மொழிக் கபிலன்' இது புலவர் திலகராகிய நக்கீரர் கூறிய புகழ் மொழி. 'பொய்யா நாவிற் கபிலன்" இவ்வாறு புகழ்ந்து பாடியவர் மாகறுக்கத்து நப்பசலையார் என்னும் சங்கப் புலவர்.

'பாம்பின் கால் பாம்பறியும்' என்பது பழமொழி. புலவர் திறனை புலவர்தானே அறிவர். நக்கீரரும் நப்பசலையாரும் கூறியுள்ள மொழிகள், கபிலரின் பெருமையை நன்கு தெரிவிக்கின்றன.

கபிலர், தமிழ் வளர்த்த சங்கத்தில் வீற்றிருந்த பெரும்புலவர், கூரிய மதி படைத்தவர். செய்யுள் இயற்றுவதில் வல்லவர். வாய்மை, அன்பு முதலிய பண்புகளில் மேம்பட்டவர். புலவர்களாலும் மன்னர்களாலும் போற்றப்பட்டவர். சிறந்த வள்ளலாகிய வேள்பாரிக்கு ஆருயிர்த் தோழராக விளங்கினவர், ஐந்திணைகளில் ஒன்றான குறிஞ்சித் திணையைப்பற்றிப் பாடுவதில் நிகரற்ற ஆற்றலுடையவர், பொருள்களின் இயல்புகளையும் செயல்களையும் உற்று நோக்கி

யறிந்து அவற்றைச் செய்யுளில் அமைதது இன்பம் விளைவிப்பதில் திறம் படைத்தவர். இரக்கம் நிறைந்த சிந்தையுடையவர்; எடுத்த செயலைத் தொடுத்து முடிப்பதில் ஊக்கமிக்கவர்.

கபிலர் பாண்டிய நாட்டிலுள்ள திருவாதவூர் என்னும் ஊரிற் பிறந்து பெரும்பாலும் மதுரையிலும் பறம்பு நாட்டிலும் வாழ்ந்தவராவார். வேள் பாரியிடம் நட்புரிமை பூண்டு பலகாலம் அவனுடன் அளவளாவி அவனது கொடைத்தன்மை, வீரம் முதலிய அரும்பண்புகளைத் தம் தீஞ்சுவைப் பாடல்களால் யாவருமறியச் செய்து இன்புற்றிருந்தனர்.

பாரியை எல்லாப் புலவர்களும் புகழ்ந்தனர். சிறந்த வள்ளலும் பெரிய அறிவாளியுமான பாரியைப் புலவர்கள் புகழ்ந்து கொண்டாடுவதில் வியப்பில்லையன்றே; இதைக் கண்டார் கபிலர்; தாமும் பாரியைப் புகழ வேண்டும் என்று விரும்பினர். அது கடமையாகவும் இருந்தது. ஆனால், எவ்வாறு புகழ்வது பாரியிடம் நட்புரிமை கொண்டவரல்லரோ நம் புலவர் அவ்வுரிமைக்கு இழுக்கு ஏற்படாத நாகரிக முறையைக் கையாளுகிறார் கபிலர்.

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப்பதுவே.

பாரி ஒருவன்தான் உலகைக் காப்பாற்றுகிறான் என்று நினைக்க வேண்டாம் மேகமும் இருக்கிறது

என்பது இதன் கருத்து. இதனால் பாரி பயன் கருதாத மேகம் போலும் ஈகையாளன் என்பதை நயமாக வெளிப்படுத்தியுள்ளாரன்றே? இதனை, பழிப்பது போலப் புகழ்தல் என்பர் இலக்கண ஆசிரியர்கள்.

சிற்றரசன் புகழ் சிறந்து விளங்குவதா இத்தீய எண்ணம் பேரரசர் உள்ளத்தில் பேய் போல் எழுந்து நடனமாடியது. அதன் பயன் என்ன? தமிழ் நாட்டு மூவேந்தரும் படை திரட்டிக் கொண்டு வந்து பறம்பு மலையை முற்றுகை யிட்டார்கள். பறம்பு நாட்டார் பல நாட்கள் வரையில் வெளிவர முடியாமல் உள்ளேயிருந்தனர். பாரியும் உள்ளேயே இன்பமாய் வீற்றிருந்தான்.

மூவரசர் முற்றுகையிட்டுள்ளதை யறிந்த கபிலர் அவர்களின் அறியாமையை மனத்துள் எண்ணி நகைத்தார். சில நாட்கள் பொறுத்திருந்தார். முற்றுகை நீடித்ததால் அவர்களிடம் சென்று கூறுகிறார்.

அரசர்களே பறம்பு மலையை எளிதில் வென்றுவிடலாம் என்று எண்ணி விட்டீர்கள்; நீங்கள் நீண்ட காலம் முற்றுகையிட்டாலும் பாரியும் அவன் படைகளும் கீழே வரவேண்டிய வேலையே இல்லை. கோட்டைக்குள் இருக்கும் மக்களுக்கு ஒரு நாளும் உணவுப் பஞ்சம் ஏற்படாது. மலை நெல், பலாப் பழம், வள்ளிக்கிழங்கு, தேன் முதலிய இயற்கை உணவுப் பொருள்கள் அங்கு ஏராளம். சுனையிலுள்ள நீர் தெளிவானது. ஆகையால் உங்கள் முயற்சி பயனற்றதாகும்.

இவ்வாறு பறம்பு மலையைக் கைப்பற்றுவது அரியது என்பதை எடுத்துக்காட்டிய கபிலர், மூவேந்தரையும் இகழும் முறையிற் கூறுவதைக் கேளுங்கள்.

உங்கள் மனைவியர், பாடும் மகளிரைப் போலப் பாடிக் கொண்டு வர நீங்கள் யாழைக் கையில் ஏந்திப் பாணர்களைப் போல ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் வந்து யாசித்தால் பறம்பு நாட்டையும் மலையையும் பாரி கொடுத்து விடுவான்.

இங்ஙனம் கூறிய கபிலர் எத்தகைய அஞ்சா நெஞ்சம் படைத்தவராய் இருக்க வேண்டும். அவர் தெரிவித்த பாடலின் சில அடிகளைக் கேளுங்கள்.

மரத்தோறும் பிணித்த களிற்றினிர் ஆயினும்
புலந்தோறும் பரப்பிய தேரினிர் ஆயினும்
தாளிற் கொள்ளலிர் வாளின் தாரலன்
யான் அறிகுவன் அது கொள்ளுமாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
வரைரையோலி கடந்நதும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே.

கபிலர் இவ்வாறு தெரிவித்ததன் வாயிலாக, பாரியின் வீரத்தையும், கொடையையும் எவ்வளவு அழகாக வெளிப்படுத்தி விட்டார்.

இவை புறநானூற்றுச் செய்திகள் ஆக புறநானூற்றுக் காட்சியொன்றைக் காண்போம்.

மலைபோல் ஓங்கி வளர்ந்துள்ளது மூங்கில். அதன் துளைகளில் காற்றுப்பட இனிய ஓசை எழுகிறது. அருவியின் நீர் ஒலியுடன் மேடுபள்ளங்களில் வீழ்ந்து ஓடி வருகிறது. ஆண் குரங்குகள் கத்திக் கொண்டு களித்து விளையாடுகின்றன. மலர்களில் வண்டுகள் ரீங்காரம் செய்கின்றன. மரத்திலுள்ள மந்திகள் மருண்டு பார்க்கின்றன. மூங்கில் மேலுள்ள ஓரழகிய மயில் ஆடுகிறது. எவ்வளவு அழகிய இயற்கைக் காட்சி இதனைக் கண்ட கபிலர் ஓவியம் போல் தோன்றும்படி ஓரழகிய பாட்டில் அமைத்து விட்டார்.

ஆடமைக்குயின்ற அவிர்துளை மருங்கின்
கோடை அவ்வளி குழலிசை யாக
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்து இயலியாடு மயில்
விழவுக்கள விறலியில் தோன்றும் நாடன்

மூங்கில் ஓசை குழலிசையாகவும் அருவியின் ஒலி மத்தள முழக்கமாகவும் ஆண் குரங்கின் குரல் ஒருவகை வாத்திய ஒலியாகவும் வண்டின் ரீங்காரம் யாழோசையாகவும் பெண்குரங்குகள் பார்ப்போராக வும் மயில் ஆடல் மகளிராகவும் உருவகித்துள்ள பாராட்டற்குரியதன்றோ? கபிலர், முழுவதும்

இயற்கையான நாட்டியக் காட்சியைச் சொல்லோவிய மாகத் தீட்டியுள்ளார்.

ஐங்குறு நூற்றிலிருந்து ஒரு காதல் காட்சியைக் காண்போம்.

அழகிய சோலையில் காதலன் அமர்ந்திருக்கிறான். காதலியின் வருகையை அவன் கண்கள் நாடுகின்றன. காதலி அவன் பின்புறமா மெல்ல வந்து அவன் கண்களைப் பொத்துகிறாள். மலர் போன்ற கைகள் பட்டதும் மனமகிழ்ந்த காதலன் பேசுகிறான்.

சிலம்புகமழ் காந்தள் நறுங்குலையன்ன
நலம்பெறு கையின் என் கண்புதைத்தோயே
பாயன் இன்துணையாகிய பணைத் தோள்
தோகை மாட்சிய மடந்தை
நீயலது உளரோ என் நெஞ்சமர்ந்தோரே.

காதலன் கேள்வியா கேட்கிறான்? தன் உள்ளத்தையல்லவா திறந்து காட்டுகிறான். நீயலது உளரோ என் நெஞ்சமர்ந்தோரே? என்பதில் அவனது களங்கமற்ற காதல் நிலை பளிங்குபோல் எவ்வளவு தெளிவாய்த் தெரிகிறது.

ஐங்குறு நூற்றிலிருந்து சில வருணனைச் செய்திகளைக் கேளுங்கள்.

வேங்கை மரம் பொன்னிறமான பூக்களைப் பூத்திருக்கின்றது. அப்பூக்களின் இடையே மயில்கள் உட்கார்ந்திருக்கின்றன. அக்காட்சி ஆபரணங்களை அணிந்துள்ள பெண்களைப்போல் இன்பம் செய்கிறது.

ஒரு குரங்கு மூங்கிலின் நுனியில் ஏறியது. அத னல் மூங்கில் வளைந்து தாழ்ந்தது. உடனே குரங்கு வேருெரு மரத்திற்குப் பாய்ந்து போக, மூங்கில் முன் போல் நிமிர்ந்தது. இது மீன் பிடிப்போரின் தூண் டில் வளைந்து நிமிர்வது போல் காட்சியளிக்கிறது.

தினைப் பயிர் அறுவடையாயிற்று. அதன் தாளில் தங்கியிருந்த குருவி இருப்பிடமின்றி எழு வதும் விழுவதுமாய் வருந்துகிறது. அப்பொழுது ஒரு மயில் சிறகை விரித்துக் கொண்டு அங்கு ஆடிச் செல்கிறது. இக் காட்சி பந்தாடும் பெண்களைப் போல் தோன்றுகிறது.

இவற்ருல் கபிலர் இயற்கைக் காட்சிகளை எவ் வளவு கருத்துடன் கவனித்துள்ளார் என்பது விளங்குகிறதன்ருே? கவிதைபாடும் திறம் படைத் தோர்க்கு இவ்வுலகமே கல்லூரி என்பது மெய் மொழி.

நற்றிணை குறுந்தொகை ஆகிய வற்றிலும் இத் தகைய அழகிய இயற்கைக் காட்சிகள் எண்ணிறந் தன வாயுள்ளன.

குறிஞ்சிப்பாட்டு என்பது அளவிற் பெரியது. ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழின் பெருமை யைத் தெரிவிப்பதற்காகக் கபிலர் இனிப் பாடினர். இதனுல்கபிலருக்கிருந்த தமிழ்ப்பற்று நன்குபுலனுகும்.

ஒரு நங்கை ஓராடவனிடம் காதல் கொண்டிருந் தாள். அது பெற்ருேருக்குத் தெரியாது. அவர்கள்

வேற்ருராடவனை மணமகனுக்குதற்கு முயன்றனர். இதனையறிந்த நங்கையின் தோழி செவிலியினிடம் உண்மையை உரைக்கிருள். இங்ஙனம் உரைப்பதற் குத் தோழி கையாண்டதாகக் கபிலர் கூறும் முறை பெரிதும் வியத்தற்குரியதாய்ச் சுவையுடன் மிளிர் கிறது. கபிலரின் கூரிய மதிவன்மைக்கு நற்சான்று பகர்கிறது இக்குறிஞ்சிப் பாட்டு.

அறிவிற் சிறந்தவராகிய கபிலர் அன்பிலும் மேம் பட்டவர் என்பதை அவரது பாட்டுக்கள் புலப்படுத்து கின்றன. வேள்பாரி இறந்த பின்னர் அவர் புலம்பிப் பாடிய பாட்டுக்கள் கற்போர் நெஞ்சைக் கரைப்பன வாகும். பாரியிடம் அவர் கொண்டிருந்த பேரன்பு, அவன் பெண்களைக் காப்பாற்ற வேண்டியது தமது பொறுப்பு என்று எண்ணச் செய்தது

ஆதலால் அவர்களைத் தக்கவர்களுக்கு மணம் செய்து கொடுக்கப் பெரிதும் முயன்றார். அதன் பிறகு பாரியின் பிரிவாற்ருமையால் உலக வாழ்வை வெறுத்து உண்ணுவிரதமிருந்து உயிர் நீத்தார். இத் தகைய தலையன்புடையவர்கள் உலகில் அரியர். கோப்பெருஞ் சோழன் இறந்தமையறிந்து தாமும் உயிர் நீத்த பிசிராந்தையாரும், சீங்கன் பிரிவால் மனம் வருந்தித் தாமும் மடிந்த பொய்யாமொழிப் புலவரும் கபிலர் போன்ற சிறந்த அன்புடையவர்களே.

கபிலர் பல நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து மறைந்து விட்டார். எலும்பு, தசை முதலியவற்ரு லாகிய, அவரது உடம்பு மறைந்து போயினும், எழுத்து

சீர் முதலியவற்ருலாகிய செய்யுள் என்னும் அழியா உடம்பில் நம்மிடையே உலாவுகிருர். அவரை நன் கறிந்து போற்றி மகிழ்வது நமது கடமை.

கபிலர் வாழ்க!

# 5. பேயனுர்

சங்ககாலப் புலவர் எனப்படுவோர், இன்றைக்கு 1500 ஆண்டுகளுக்கு முற்பட்டவர்களும், தலையிடை கடை என்ற முச்சங்கத்து விளங்கியவர்களுமான சான்ருேர்கள் ஆவார். அவர்களுள் பேயனுர் என்ற புலவர் பெரியார் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர் ஆவார்.

இக்கடைச் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தவர். சிறு மேதாவியார், சேந்தம்பூதனுர், அறிவுடையர னுர், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறனுர், நல்லந்துவனுர், மருதனிளநாகனுர், கணக்காயனுர், மகனுர் நக்கீரனுர் என்ற இத்தொடக்கத்து நாற்பத் தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத் தொன்பது புலவர்கள் பாடினர் என்றும் கூறப்படும். அவர்களாற் பாடப்பட்டன நெடுந் தொகை நானூறும் குறுந்தொகை நானூறும், நற் றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப் பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரி சையும் என்று இத்தொடக்கத்தன பலவாகும். இச் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை.

பேயனார் என்ற புலவர் பெருமான் பாடியன வாக, அகநானூற்றில் ஒன்றும், குறுந்தொகையில் நான்கும் ஐங்குறுநூற்றில் நூறும் ஆக நூற்றைந்து செய்யுட்கள் இப்பொழுது காணப்படுகின்றன இத னால், கடைச்சங்க காலத்திருந்து பாடிய பெரியோர் களில் இவரும் ஒருவர் என்பது நன்கு புலப்படும். பண்டைக் காலத்து, காரைக்காற் பேயார் என்று ஒரு பெரியார், பாடும் வன்மையுடையவராயிருந்தனர் என்பது யாப்பருங்கலவிருத்தி உரைக்குறிப்பால் தெரிகின்றது இக்காரைக்கால் பேயார் என்பவரும் நம் ஆராய்ச்சிக்குரிய பேயனாரும் ஒருவரோ அல்லது வேறுபட்டவரோ என்ற ஐயம் இன்றும் சில கல்வி யறிவு சான்ற பெரியோர் மாட்டு நிலவுகின்றது இதற் குக் காரணம் இப் பேயனார் பேயார் என்றும் சிற்சில இடங்களில் வழங்கப்படுதலால். இவர் ஐங்குறு நூற்றில் பாடியனவாயமைந்த நூறு செய்யுட்களும் அகப் பொருளில் முல்லைத் திணையைப் பற்றியன வாகும். குறுந்தொகையிலும் இரண்டு செய்யுட்கள் முல்லைத் திணையைப் பற்றியனவே. இங்ஙனம் பேய னார் பெரிதும் முல்லைத்திணை வளங்களைப்பற்றி விளங் கப் பாடுதலால் அத்திணையில் மிகப் பயின்றவர் எனத் தெரிகின்றது. இது போல் பாலை முதலிய பிற திணை களிலும் பெரிதும் பயின்ற புலவர் பெருமக்கள் பண் டைக் காலத்திருந்துள்ளார். அன்னாருட்சிலர் 'பாலை பாடிய' என்றும் 'மருதம் பாடிய' என்றும் சிறப்புப் பெயர்களும் பெற்று விளங்குதல் நாம் அறிவோம்.

இனி, பேயனார் பாடிய செய்யுட்களை ஒரு புடைய் ஆராய்வதன் முன்னம், அச் செய்யுட்களில் பொதுக்

கருத்தாகிய 'முல்லைத் திணை' என்பது எப் பொருள் பற்றியது என்பது ஆராய்வது அடுத்தபடி சாலப் பொருந்துவதொன்றாகும்.

தமிழ் மக்கள் முறைப்படி, அகத்திணை புறத் திணை என்ற இரு பெரும் பகுதியாகப் பொருளிலக்கணம் பேசப்படும். அவற்றுள் அகத்திணையாவது, அக ஒழுக்கமாகும். அதாவது ஒத்த அன்பொடு ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த இன்பம் அக் கூட்டத்தின் பின் இவ்வாறிருந்ததென்று பிறருக்குக் கூறப்படாததாய், எங்கும் உள்ளத் துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதாகும். அறம் பொருள் இன்பம் என்றவற்றுள் இவ்வகப் பொருள் பெரிதும் இன்பம் கருதியது ஆகும். இவ்வகப் பொருள் களவு கற்பு என இரு பெரும் பிரிவுகளாகப் பகுக்கப்படும். இது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து உட்பிரிவுகளையுடையது. இவை சிறப்புடையன எனப் பேசப்படும். இவற்றுள் முல்லைத் திணையாவது, கற்பு என்ற ஒழுக்கமாகும். இதற்குரிய நிலம் முல்லை நிலம். ஆவது காடும் காடு சார்ந்த நிலங்களும். இந் நிலம் கார் காலத்தில் வளம் பெற்று விளங்கும். ஆதலால் இத் திணைக்குரிய காலம் கார் காலமெனக் கவிகளால் வருணிக்கப்படும். இங்குள்ள ஊர் சீறூர் என்று கூறப்படும். இங்கே வாழும் மக்கள் இடையர்கள். இவர்கள் தொழிலாகிய ஆடு மாடுகள் மேய்த்தல், புனங்களையுழுது வரகு விதைத்தல் முதலிய சிறக்க இத்திணையைப் பற்றிய செய்யுட்கள் கருப் பொருளாகப் பேசும். இந் நிலத்துக்குரிய முல்லை மலர்கள்

பல படித்தாக இத்திணைச் செய்யுட்களில் பாராட் டப்படும். இம்முல்லை கற்பிற்கறிகுறி என்றும் கட் டப்படும். இத்திணை ஒழுக்கமாவது தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றியிருத்தல் என்பது. இஃது இத் திணைக்குரிய உரிப் பொருளாக நூல்கள் சித்தரிக்கும். இதற்குரிய சிறு பொழுது மாலை. இம் மாலைக்கால வருணனைகள் இத்திணைபற்றிய செய்யுட்களில் பல படித்தாய் வெகு அழகாக விளங்கக் காணலாம். ஆம்பல் முதலிய நீர்ப் பூக்கள் கூம்புகின்றன; முல்லை, பகன்றை முதலிய மலர்கின்றன. கடலும் கானலும் பொலிவழிந்து தனிமைக் கோலத்தோடு தோன்று கின்றன. தொழில் மேல் சென்றவர் தத்தம் தொழிலினின்றும் நீங்கி வீடு நோக்கி வருகின்றனர். பசுக்களை வீட்டிற்கு ஓட்டிவரும் இடையன் வழியில் மலர்ந்த முல்லைப் பூவைப் பறித்துச் சூடி வரு கின்றான். பறவைகள் தத்தம் குஞ்சுகளுக்குரிய இரையை வாயிற் கவ்விக் கொண்டு கூடு கட்டிய மரங்களில் வந்து அடங்குகின்றன. இத்தகைய காலத்துத் தலைவரைப் பிரிந்த மகளிர் காமநோய் மேலிட்டு வருந்துகிறார். இங்ஙனம் பிரிந்த தலைவியர் மாலைக் காலத்தை யிகழ்வதும், தம் கணவரோடு கூடும் மகளிர் களிப்புற்று விளக்கேற்றுவதும். விருந் தினரை உள்ளே அழைத்துச் சென்று விருந்தயரச் செய்வதும் மாலைக் காலத்துக்குரியனவாகப் பாராட் டப்படும். இவை சிறந்த கற்பனைக்குரிய கருத்துக்க ளாகும்.

இனி, பேயனார் இயற்றிய செய்யுட்களுள் 'குறுந்தொகை' என்ற நூலில் உள்ள செய்யுட்களை

ஆராயப்புகுவோம்.

"சேயாறு செல்லாமாயி னிடரின்று
களைகலம் காமம் பெருந்தோட்கென்று
நன்று புரிந்தெண்ணிய மனத்தையாகி
முரம்பு கண்ணுடைய வேகிக் கரம்பைப்
புதுவழிப்படுத்த மதியுடை வல வோய்
இன்று தந்தனை தேரோ
நோயுழந்துறை வியை நல்கலானே"

இது, தான் மேற்கொண்ட காரியம் நிறைவேறப் பெற்று, மீண்டு வந்த தலைவன், தலைவியைக் கண்டதும் மனம் களிப்புற்றவனாய், தேர்ப்பாகனை நோக்கிக் கூறியதாகக் கருத்தமைந்தவொரு செய்யுளாகும்.

நெடுந்தூரமாகிய வழியைக் கடந்து சீக்கிரம் செல்லேமாயின், துன்பமின்றித் தலைவியினுடைய காமநோயைக் களைய மாட்டோம் என்று எண்ணிய மனத்தையுடையையாகி, பருக்கைக் கற்களோடு கூடிய மேட்டு நிலமெல்லாம் விண்டு தவிடுபடும் வண்ணம் விரைந்து சென்று, கரம்பு நிலத்திலே புதிய வழியையுண்டாக்கிய தேர்ப்பாகனே! நோயினால் வருந்தும் தலைவியை இறந்து படாமல் எனக்குத் தருதற்கு நீ காரணமானமையின், இன்றைக்கு நீ தேரையா தந்தனை; தலைவியையே எனக்குத் தந்தவன் ஆகின்றாய் என்று அவனைத் தலைவன் புகழ்ந்ததாகும்.

இங்கு பாகனுக்குக் கண்டுள்ள அடைமொழி நுனித்துப் பார்க்கத்தக்கது.

தேர் செல்லுதற்குரிய வழி முரம்பு நிலத்தில் இல்லாமலிருந்தும் விரைந்து சென்று தலைவியைத் தலைவன் காணும் நிமித்தம் புது வழியை உண்டாக்கிச் சென்றான் என்றது பாகனது ஆற்றலைக் கூறிய படி. இது பற்றியே 'மதியுடை வலவ' என்றும் பாகனை அடைமொழி தந்து கூறியதும்.

கடைசி இரண்டு அடிகளில், நீ, தலைவியின் உயிர் நீங்காது தருதற்குக் காரணமானமையின், தேரை மட்டும் தந்தாய் என்பதற்கில்லை; அவள் உயிரையும் தந்தாயாகின்றாய் என்ற கருத்துப் பெரிதும் போற்றத் தக்கது.

)ல் தலைவன் சுற்று வழியாகச் சென்று சிறிது தாமதிப்பானாயின், தலைவி ஆற்றாது உயிர் விடுதலும் கூடும் என்ற கருத்தும் புலப்படுகின்றது. மற்றும் தலைவன் கூற்றாக வினை மேற்பிரிந்து சென்ற தலைவன் மீண்டும் வருகையில் பாகனுக்குத் தலைவியது ஊரைச் சுட்டிக் காட்டியதாய் ஒரு செய்யுள் வந்துள்ளது.

அச் செய்யுளில் தலைவியது ஊர்,

"கவலை சேண்டிய வகல் வாய்ச் சிறு குழி
கொன்றை போள் வீதா அய்ச் செல்வர்
பொன் பெய் பேழை மூய் திறந்தன்ன
காரெதிர் புறவினதுவே"

என்று வருவிக்கப் பெற்றுள்ளது.

கவலை என்ற ஒரு வகைக் கிழங்கைக் கல்லிய தனால் உண்டான அகன்ற வாயையுடைய சிறிய குழி, கொன்றையினது ஒள்ளிய மலர் பரவப் பெற்று செல்வருடைய பொன்னையிட்டு வைக்கும் பெட்டியினது மூடியைத் திறந்து வைத்தாற் போன்ற தோற்றத்தையுடைய கார் காலத்தை ஏற்று விளங்கும் முல்லை நிலம் என்பது பிண்டப் பொருள்.

குழிக்குப் பெட்டியும் கொன்றைக்குப் பொன்னும் உவமைகள். கொன்றை பொன்னிறமுடை யது பற்றி இவ்விதம் உவமிக்கப்பட்டது. கொன்றை மலர்கள் மலரும் காலம் கார் காலம் என்பது, இங்குக் கொண்ட கருத்து. பணக்காரர்களுடைய, பொற் காசுகள் சொரிந்து திறந்து வைத்த பெட்டியாக முல்லை நிலத்தில் காணப்படும் சிறுகுழிகள் உவமிக்கப் பட்டுள்ளன. இந்த உவமை அறிவாளிகள் உள் ளத்தை அள்ளும் திறமையுடையது. இன்னும் பொன் படைத்த செல்வர் கவலைகள் பெரிதும் நீங்கிய வர் என்ற தொனிப்பொருள் முதலடியை உய்த்து நோக்குவாருக்குப் புலனாகும். பிற கிழங்குகளை, அல் லது பொருள்களைக் கெண்டி யெடுத்ததனால் ஏற் பட்ட சிறு குழி யென்னாது 'கவலை கெண்டிய' என்ற அடைமொழி இக்கருத்தை வற்புறுத்தும். இங்ஙனம் பொருத்தமான உவமைகளை அழகுபெற அமைப் பதும், சந்தர்ப்பத்திற்கேற்ற கருத்துடை அடை மொழிகளைப் பொருத்துவதும் பண்டைப் பெருங் கவிகளுக்குச் சர்வ சாதாரணமான ஒரு செய்தி யாகும்.

இனி ஐங்குறு நூற்றுச் செய்யுட்களை ஒருபுடை ஆராய்வோம்.

ஐங்குறு நூற்றில் முல்லைத் திணையில் 'இளவேனிற் பருவம் பாராட்டுப் பத்து' என்பது ஒரு பகுதி.

தலைவியை விட்டுப் பிரிந்த தலைமகன், கார் காலம் வருவதற்கு முன் திரும்பி விடுவதாக உறுதி கூறிப் பிரிந்து சென்றான். அங்ஙனம் வாக்கு அளித்தபடி அவன் திரும்பி வராவிடின் தலைவி கார்காலம் கண்டதும், தாங்காது உயிர் விட்டுவிடுவாள் என்பது அவன் உணர்வாளுகலின், பருவம் குறித்துப் பிரிந்த தலைமகன் தன் காரியங்களை முடித்துக் கொண்டு திரும்பி விடுகின்றான். திரும்பியவன் தலைவியொடு கூடிச் செல்லுகின்ற பொழுது, கார் காலத் தோற்றத்தைக் கண்டு தலைவிக்கு தான் பருவம் (கார் காலம்) வருவதற்கு முன்னே வந்ததாக கூறும் கருத்துக்கள் இப் பகுதியில் காணப்படும். இதில் கார் கால இயற்கை நிகழ்ச்சிகள் அழகாகச் சித்தரிக்கப்படும்.

பொன்னென மலர்ந்த கொன்றை
தேம்படு காயா மலர்ந்த தோன்றியொடு
நன்னல மெய்தினை புறவே நின்னைக்
காணிய வருதும் யாமே
வாணுதலரிவையொடு ஆய்நலம் படர்ந்ததே.

பொற்காசுகள் போல் கொன்றைகள் பூத்துள்ளன; இனிய காயாம் பூக்கள் மலர்ந்துள்ளன; தோன்றி மலர்கள் சிறக்க அழகு செய்கின்றன; இங்ஙனம் பல்வகைப் பூக்களால் ஏ முல்லை நிலமே, நீ பொலி

வுற்றுக் கார் காலம் வந்ததும் விளங்குகின்றாய்; உன்னை நாளும் என் தலைவியும் காண வந்தோம். ஒளி பொருந்திய நெற்றியையுடைய எம் தலைவியோடு சிறக்க பல்வகை நலமும் எய்தி நீயும் விளங்குகின்றாய் என்பது இவ்வடிகளில் குறிப்பிட்ட கருத்தாகும்.

இங்கு கார் காலத்திற்குரிய இயற்கைப் பொலிவுகள் முதல் மூன்றடியில் குறிப்பிடப் பெற்றுள்ளன. மற்றும் பின் இரண்டடிகளில் நீ எவ்விதம் பல் வகை மலர்கள் செறிந்து சிறந்த மணமுற்று விளங்குகிறாயோ அதுபோல் தலைவியும் தலைவனோடு கூடி மணம் சிறந்து விளங்குகிறாள். அவள் உயர்ந்த நலம் படர்ந்து விளங்குதல் போல் நீயும் இது பொழுது விளங்குதலால் அவளொடு உன்னை நான் காண வந்தேன் என்று தலைவன் கூற்றாகக் கார் காலத்து முல்லை நிலத்தைப் பார்த்து விளித்ததாகக் கவி சித்தரித்துள்ள கற்பனை நயம் பெரிதும் பாராட்டத் தக்கது ஒன்றல்லவா?

வேறோர் இடத்து, வினைமுற்றி வந்த தலைமகனைக் கண்டு தோழி கூறியதாகப் பின் வரும் செய்யுள் அமைந்துள்ளது.

கொன்றைப் பூவிற் பசந்த உண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன இவட்கே; வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
வயமான் றோன்றல் வந்தமாறே.

தலைவனே உன் பிரிவு நீடித்ததனால் ஆற்றாமை காரணமாகக் கொன்றைப்பூவைப்போலப் பசலைநிறம் மீதூரப் பெற்ற தலைவியின் கண்கள், பாசறையினின்றும் நீ திரும்பியதும், உன்னைக் கண்டு குன்றினிடத்து ஆழமான நீர்ச்சுனையில் பூத்த குவளை மலர்கள் போலப் பழைய பொலிவுற்றன என்பது இச் செய்யுளின் கருத்தாகும். இதில் தலைவி வருந்திய காலத்துக் கண்கள் பசந்து பொலிவழிந்ததைக் கொன்றையின் நிறத்திற்கும், தலைவன் திரும்பியதும் மகிழ்ச்சியெய்திய நிலையில் கண்கள் முழுப்பொலிவுற்று விளங்குவதை ஆழமான நீர்ச்சுனையில் பூத்த குவளை மலர்களின் வனப்பிற்கும் நிகராக ஆசிரியர் வர்ணித்துள்ளதை உற்று நோக்குங்கால், பண்டைக் காலத்து ஆசிரியர்கள் ஒவ்வொரு பொருளின் இயற்கைப் பொலிவையும் எத்துணை உய்த்து நோக்கும் பேரறிவாளர் என்பதும், உவமைகள் சந்தர்ப்பத்துக்கேற்ப அமைப்பதில் எவ்வளவு வன்மையுடையார் என்பதும் நன்கு அறியப்படும்.

பேயனார் போன்ற பெரியோர் பாடல்கள் எல்லாம் நமக்குப் பெரும் உறுதி பயப்பனவாகும்.

பேயனார் வாழ்க.



Senguntha Mithran Press, Madras—M S. 85